19th August 1961]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த தீவிர சாகுபடித் திட்டத்தின் கீழ் சிற்சில அபிவிருத்தி வட்டாரங்களில் இந்தத் திட்டம் எடுத்துக் கொள்ளப்பட்டு வருகிறது. எல்லா வட்டாரங்களிலும் இது பூர்த்தி செய்யப்படும். இதல்லாமல் ஏற்கெனவே ஸ்பெஷல் மைனர் இர்ரிகேஷன் திட்டம் என்றிருக்கிறது. அதன் கீழே லிப்ட் இரிகேஷன், பில்டர் பாயின்ட் போன்ற திட்டங்கள் அமுல் நடத்தப்பட்டு வருகிறது. எங்கெங்கு அவ்வாறு ஏற்கனவே நடத்தப்பட்டு வருகின்றதோ அவையெல்லாம் தீவிர சாகுபடித் திட்டத்தின்கீழ்க் கொண்டுவரப்படும்.

SRI A. VEDARATHNAM : போர்ட் பவுண்டேஷன் மூலம் நமக்கு பவர் டிரில்கள் ஏதாவது கிடைத்திருக்கிறதா? நாம் கோரி அவர்கள் கொடுக்கவில்லையா, அல்லது நாம் கோரவேயில்லையா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : போர்ட் பவுண்டேஷன் மூலம் பிரத்தியேகமாக பவர் டிரில்லைக் கோரவில்லை. இருப்பதை வைத்து நடத்திக் கொண்டு வருகிறோம்.

SRI R. SRINIVASA IYER : இந்த தீவிர சாகுபடித் திட்டம் காவேரி நீர்ப்பாசனம் இல்லாத ஏரியாவில் விஸ்தரிக்கப்படும் போது அங்கு ஆழக் கிணறுகள் தோண்ட அல்லது ட்யூப் வெல்ஸ் இன்ஸ்டால் செய்ய பாக்கேஜ் டீலில், ஏதாவது திட்டமிருக்கிறதா ? இல்லையெனில் என்ன வகை செய்ய உத்தேசம் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நான் முன்பே விடையளித்தேன். ஏற்கெனவே எங்கெங்கு திட்டங்கள் நிறைவேற்றப்பட்டு வருகின்றனவோ அப்பிராந்தியங்கள் இந்த தீவிர சாகுபடித் திட்டத்தின்கீழ் கொண்டு வரப்படும்போது ஏற்கெனவே நிறைவேற்றப்பட்ட திட்டங்களும் இந்தத் தீவிர சாகுபடித் திட்டத்தின்கீழ் நிறைவேற்றப்படும்.

*Government T.B. Sanatorium (Tambaram)*

* 1274 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

டி.பி. வியாதியால் பாதிக்கப்படும் தொழிலாளர்களுக்கு சிகிச்சை அளிக்க இன்ஸ்யூரன்ஸ் ஸ்கிமின்கீழ் தாம்பரம் சானிடோரியத்தில் அவர்களுக்கென்று தனியாக பிளாக்குகள் ஏற்படுத்த உத்தேசமுண்டா ? விவரமென்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : Yes, Sir.

The Government have sanctioned the construction of two permanent wards of 26 beds each in the T.B. Sanatorium, Tambaram for the use of the insured workers under the Employees' State Insurance Scheme.

SRI V. K. KOTHANDARAMAN : தாம்பரம் சானிட்டோரியத்தில் பல துறைகளில் வேலை செய்யக்கூடிய சிப்பந்திகள், தொழிலாளர்களுக்கு ஏற்கனவே கட்டிடம் கட்டப்பட்டு சிகிச்சை அளிக்

[19th August 1961

கப்பட்டு வருகிறது. ஏழைத் தொழிலாளர்கள் பலர் பாதிக்கப்படு கிறார்கள். அவர்கள் சிகிச்சை பெறுவதற்கு என்று சொன்னால் ரெஜிஸ்ட்டர் செய்யப்பட்டு ப்ரயாரிட்டிபடிதான் கொடுக்க முடியும் என்ற நிலை இருக்கிற காரணத்தினால் அவர்கள் சிகிச் சைக்கு வேண்டிய வசதியில்லாமல் கஷ்டப்படுகிறார்கள். ஆகவே உடனடியாக இந்தக் கட்டிடத்தைக் கட்டி இவர்களுக்கு வசதி செய்ய ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இப்பொழுது தாம்பரம் சானிட்டோரியத்தில் தொழிலாளர்களுக்காக 25 பெட்ஸ் ரிசர்வ் செய்திருக்கிறார்கள். இதுதவிர 56 பெட்ஸ் கொண்ட இரண்டு வார்ட்ஸ் 1,20,000 ரூபாயில் கட்டிக் கொண்டிருக்கிறோம். இவை இரண்டும் முடிவடைந்தால் 27 பெட்ஸ் கூடும். ஈ.எஸ்.ஐ. கார்ப்பரேஷன் அளவுகோல்படி 60 பெட்ஸ் இருந்தால் போதும், ஆயிரம் தொழிலாளர்களுக்கு ஒரு பெட் என்ற முறையில். ஆகவே நமது தேவைக்கு அதிகமான பெட்ஸ் இந்தக் கட்டிடம் கட்டி முடிந்தவுடன் கிடைத்து விடும்.

SRI S. PAKKIRISAMI PILLAI : கீழ்ப்பாக்கத்தில் கட்டும் டி.பி. ஆஸ்பத்திரி கட்டி முடிய எவ்வளவு மாதங்கள் ஆகும்? எப்பொழுது அது செயல்படும் முறையில் கொண்டுவர முடியும்? ஏற்கனவே வெயிட்டிங் லிஸ்டில் உள்ள தொழிலாளர்களுககு வைத்திய வசதி உடனடியாகக் கொடுக்க அரசாங்கத்தில் என்ன திட்டம் இருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : கீழ்ப்பாக்கத்தில் கட்டுகிற ஆஸ்பத்திரி டி.பி. ஆஸ்பத்திரியல்ல. ஜெனரல் ஹாஸ் பிட்டல். கனம் அங்கத்தினர் தினம் அவ்வழி போய்க்கொண்டிருக் கிறார்கள். அவர்தான் சொல்ல வேண்டியது அந்தக் கட்டிடம் எந்தளவு வளர்ந்து கொண்டிருக்கிறதென்று. (இன்டரப்ஷன்) திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் அந்த இடத்தைப் பார்க்கவில்லை யென்று தெரிகிறது. மாடி தளம் வரை வந்துவிட்டது. அக்டோப ரில், அதைக் கட்டி முடித்து ஆஸ்பத்திரியை திறந்து விடலாம் என்று யோசனை செய்து கொண்டிருக்கிறோம். இடையில் ஸ்டீல், சிமெண்ட் கிடைக்காமல் சிறிது காலதாமதமாயிற்று. அதனால் தான் ஒன்றிரண்டு மாதங்கள் ஷெட்யூலுக்கு பின்தங்கியிருக் கிறோம். அந்த ஆஸ்பத்திரியில் உடனடியாக 175 பெட்ஸ் கிடைக்கும். மேற்கொண்டு விஸ்தரிப்பதற்கும் சாங்ஷன் வாங்கி யிருக்கிறோம். மேல் மாடியும் கட்டி முடித்து விட்டால் 250 வரை யில் கிடைக்கும். இந்த வருடத்திற்குள்ளாக இந்தக் குறைபாடு கள் எல்லாம் நீங்கி விடும்.

SRI M. KALYANASUNDARAM : ஈ.எஸ்.ஐ. டிப்பார்ட்மென்டில் எடுத்திருக்கிற கணக்கில் தவறு இருக்கிறது என்று நினைக் கிறேன். அறுபது பெட்ஸ் டி.பி.-க்கு என்றால், ஏராளமானவர்கள் பதிவு செய்துகொண்டு காத்துக்கொண்டிருப்பதாகத் தெரிகிறது. ஆகவே இதை அதிகப்படுத்தி, திருச்சி ராஜாஜி சானிட்டோரியத் திலோ அல்லது பெருந்துறை சானிட்டோரியத்திலோ பெட்கள் ஒதுக்க ஏற்பாடு செய்யப்படுமா ?

19th August 1961]

**THE HON. SRI R. VENKATARAMAN :** *எவ்வளவு தொழிலாளர்களுக்கு எவ்வளவு டி.பி. பெட்ஸ் ஒதுக்க என்று ஈ.எஸ்.ஐ. கார்ப்பரேஷன் முடிவு செய்கிறது. அதில் அகில இந்தியாவில் தொழிற்சங்கக் காங்கிரசும் ஒரு பிரதிநிதி. அவர்கள் அந்த இடத்தில் சொல்லி அங்கு மாற்றிக் கொள்ள வேண்டும். சென்னை நகரத்தில் 51,300 'இன்ஷ்யூர்ட் பேஷியன்ட்ஸ்' தொழிலாளர்கள் இருக்கிறார்கள். அதன்படி 51 கொடுக்கவேண்டும். அனுமதித்தது 60. நாம் கட்டப்போவது 80. இன்னும் அதிகம் வேண்டுமென்றால் கார்ப்பரேஷன் கூட்டத்தில் தொழிலாளர்கள் பிரதிநிதிகள் சேர்ந்து 1,000-க்கு ஒன்று என்பதை மாற்றி 750 அல்லது 500-க்கு ஒன்று என்று மாற்றிக் கொடுத்தால்தான் இதை அதிகமாக்க செய்ய முடியும். மற்ற பகுதிகளில் உள்ள எல்லாத் தொழிலாளர்களுக்கும் அங்கு வசதி செய்திருக்கிறோம். கோவையில் உள்ளவர்களுக்கு எல்லாம் வசதி செய்திருக்கிறோம். பெருந்துறை சானிட்டோரியத்தில் இப்பொழுது நாம் 60 பெட்ஸ் கொடுக்க வேண்டும். எண்பது பெட்சுக்கு வசதி செய்திருக்கிறோம். தூத்துக்குடி, அம்பாசமுத்திரம், சிவகாசி, ராஜபாளையம், இந்த ஒவ்வொரு இடத்திற்கும் 15 பெட்ஸ் செய்திருக்கிறோம்.*

SRI K. VINAYAKAM : Apart from the workers suffering from Tuberculosis, is the Hon. Minister aware of the fact that many general patients who had an attack of T.B., and who got their names registered in the sanatorium, got the admission cards long after their death when they had gone to join the majority? Will the Government take steps to see that such instances do not occur and such of those who suffered from the dreadful disease and who sought admission in the sanatoria are automatically admitted into them? Will arrangements be made to augment the resources of the sanatoria and to increase their bed-strength in spite of the slender finances of the Government?

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, unfortunately, the question is addressed to wrong quarters. I am dealing only with the Employees-State-Insurance Scheme. The question that the Hon. Member has just now put should be addressed to my Colleague the Health Minister.

*Recreation Clubs (Coimbatore district)*

*** 1275 Q.—SRI N. MARUDACHALAM :** *கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) கோவை ஜில்லாவில் சர்க்கார் அனுமதி பெற்ற ரிக்ரியேஷன் கிளப்கள் எத்தனை ? கிளப்களில் குடி, சீட்டு ஆட்டம் நடைபெறுவது சர்க்காருக்குத் தெரியுமா ?*

*(இ) மேற்கண்ட கிளப்கள் சர்க்கார் அதிகாரிகளால் கண் காணிக்கப்படுகின்றனவா ?*

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** *(அ) (இ)* There are 217 Recreation Clubs in Coimbatore district. All these clubs have been registered under the Societies Registration Act, 1860.